Licensed to Post Without Pre-Payment Licence No 6T N MS CPP 55

Progressive Tamil Daily to the People

# தமிழகத்தில் விவசாய பணிகள் தீவிரம்

Regd No. TN MS [C] 244 Phone 420212 4 பக்கம் விலை 70 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 12 சென்னை வியாழன் 10 12 87 வெளியூர் வெள்ளி 11 12-87 இதழ் 54

## 7 ஆண்டுகளுக்குப் பின்னர் மாவட்டங்களில் நல்ல மழை

**சென்னை, டிச. 10-கடந்த 7 ஆண்டுகளுக்குப் பிறகு பருவமழை தொடர்ந்து பெய்துகொண்டிருப்பதால் தமிழகத்திலுள்ள ஏரி-குளங்கள் நிரம்பி வருகின்றன. விவசாயிகள் மகிழ்ச்சி அடைந்துள்ளனர். ஆங்காங்கு விவசாய வேலைகளில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.**

தமிழகத்தில் கடந்த ஏழு ஆண்டுகளாக பருவமழை தவறியதால் நிலவி வந்த தண்ணீர் தட்டுப்பாடு வடகிழக்கு பருவமழையினால் முழுவதும் நீங்கியுள்ளது,

கடந்த ஜூலை மாதம் முதல் செப்டம்பர் மாதம் வரை தென்மேற்கு பருவமழை பெய்ததால்தென் மாவட்டங்களுக்கு போதுமான தண்ணீர் கிடைத்தது. வட மாவட்டங்களில் அப்போது மழை இல்லை.

ஆனால் அக்டோபர் முதல் தேதி வடகிழக்கு பருவ மழை பெய்யத் தொடங்கியது இந்தமழை காரணமாக தென்மாவட்டங்களில் உள்ள ஏரி குளம் கிணறுகள் எல்லாம் நிரம்பியுள்ளன.

இந்த பருவமழை டிசம்பர் 15ந் தேதிவரை பெய்வதால் மேலும் நீர்பிடிப்பு பகுதிகளுக்கு நீர்வரத்து வந்து கொண்டே இருக்கிறது,

சராசரி பெய்யவேண்டிய அளவை விட அதிகமாக வடகிழக்கு பருவமழை இந்த ஆண்டு பெய்துள்ளது.

அண்ணா மாவட்டத்தில் 461 மில்லி மீட்டர் மழை பெய்துள்ளது. ஆனால் 385 மில்லி மீட்டர்தான் சராசரியாக மழை பெய்யும் 76 மில்லிமீட்டர் அதிகமாக பெய்துள்ளது.

அதே போல் கோவையில் 381மி.மீ (சராசரி 307)தர்மபுரி 286 மி.மீ(சராசரி273) கன்னியாகுமரி 531மி.மீ (சராசரி 394) காமராசர் 574மி.மீ[சராசரி373)மதுரை 461மி.மீ [சராசரி362] பசும்பொன்முத்துராமலிங்கம் 405 மி.மீ.(சராசரி 325)பெரியார் 428 மி.மீ (சராசரி300) ராமநாதபுரம் 459 மி.மீ. (சராசரி 406) சேலம் 354மி,மீ [சராசரி 279] அளவுமழை பெய்துள்ளது தொடர்ந்து 15ந் தேதிவரை மழை பெய்யும்

வடமாவட்டங்களான செங்கல்பட்டில் 430 மி.மீ மழை பெய்திருக்கிறது [சராசரி 517] புதுக்கோட்டை 307 மி.மீ [சராசரி 331] தென்னாற்காடு 353மி.மீ [சராசரி514] தஞ்சை 456 மி.மீ. (சராசரி) 565) திருச்சி 226 மி.மீ [சராசரி 345] தொடர்ந்து மழை பெய்து கொண்டிருப்பதால் இந்த மாவட்டங்களில் வறட்சி தணிந்து ஏரி, குளங்களில் போதுமான அளவு தண்ணீர் நிறைந்துள்ளது.

### விவசாயிகள் ஆர்வம்

நாடெங்கும்பரவலாகமழை பெய்துள்ளதையொட்டி விவசாய பணிகளில் ஆர்வம் காட்டி விவசாயிகள் செயல்படுகிறார்கள்.

மழை காரணமாக பொதுவாக பயிர்களை பூச்சி நோய் தாக்குவது உண்டு. ஆனால் இப்போது எங்கும் பூச்சி நோய் இல்லை. எங்காவது பூச்சி நோய் காணப்பட்டால் உடனடியாக அவற்றை அழிக்க விவசாய துறையினர் தனது நிபுணர் குழுவுடன் தயாராக இருக்கிறார்கள்.

விவசாயிகள் தங்கள் வயல்களில் மகிழ்ச்சியுடன் வேளாண் பணிகளில் ஈடுபட்டு வருவதால் அவர்களுக்கு தேவையான உரம், பூச்சி மருந்து விதை போன்றவைகளை வேளாண் துறையினர் ஆங்காங்குள்ள கிடங்குகளில் இருப்பு வைத்துள்ளனர்.

தஞ்சை மாவட்டத்தில் தென்மேற்கு பருவமழையின் போது நெல்விதை தெளிப்பு முறையில் பயிரிடப்பட்டது. அந்த தெளிப்பு விதை பயிர்கள் இப்போது சிறப்பாக வளர்ந்துள்ளதால் இந்தசாகுபடி அமோகமாக இருக்கும் என்று வேளாண் துறையினர் கருதுகிறார்கள்.

பல்வேறு இடங்களில் சம்பா பயிர் தற்போது அறுவடை, நடப்பு நிலைகளில் உள்ளது.

அடுத்த ஓரிரு வாரங்களில் தமிழகத்தில் நவரை பயிர் சாகுபடி செய்ய விவசாயிகள் தயாராகியுள்ளனர் ஆங்காங்கு உள்ள ஏரி குளங்களில் இருக்கும் நீரின் அளவையொட்டி நவரை பயிரிடுவது குறித்து வேளாண் துறையினர் ஆலோசனைகளை வழங்கி வருகிறது.

கடந்த 3 ஆண்டு கால நெல் உற்பத்தியை விட இந்த ஆண்டு உற்பத்தி அமோகமாக இருக்கும் என்று கருதப்படுகிறது.

## தமிழில் அரசியல் சட்டம்

சென்னை, டிச. 10-

இந்திய அரசியல் சட்டம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்படவுள்ளதாக அமைச்சர் வி.வி.சுவாமிநாதன் தெரிவித்துள்ளார்.

அமைச்சர் வி.வி.சுவாமிநாதன் நேற்று நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:

இந்திய அரசியல் சட்டம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வருகிறது. வரும் குடியரசு தினத்துக்கு [ஜனவரி 26-ந் தேதி] முன் இது வெளியிடப்படும். இதற்கான வேலைகள் கிட்டத்தட்ட முடிந்துவிட்டது.

பிரதமர் ராஜீவ்காந்தியை சமீபத்தில் டெல்லியில் சந்தித்தபோது தமிழகத்திலுள்ள அனல் மின் நிலையங்களுக்கு ஆஸ்திரேலியாவிலிருந்து நிலக்கரியை இறக்குமதி செய்ய அனுமதிக்க வேண்டுமென்று கேட்டேன், இவ்வாறு அவர் கூறினார்,

## வங்கியில் மோசடி: வாலிபர் கைது

சென்னை, டிச 10-

சென்னை ஐஸ்ஹவுஸ் பகுதியில் வசிப்பவர் சபியுல்லா இவர் ஏ.எம்,ஐ.இ படித்துள்ளாராம்.

ஆனால் இவர் தான் பி.இ. படித்ததாக கூறி இந்தப் பகுதியிலுள்ள இந்தியன் வங்கியில் மோசடி செய்ய முன்றாராம் அத்துடன் 30 ஆயிரம் ரூபாய்க்கு போலி செக் ஒன்றையும் இவர் இந்த வங்கியில் கொடுத்தாராம்

இது தொடர்பாக வங்கி அதிகாரிகள் மத்திய குற்றப் பிரிவு போலீசில் புகார் செய்தனர் போலீசார் சபியுல்லாவை கைது செய்து விசாரித்து வருகின்றனர்.

## வடகிழக்கு பருவமழை: மாவட்டங்களில் பெய்த மழை அளவு

| மாவட்டம் | பெய்த மழை (மி. மீ.) | சராசரி மழை (மி. மீ.) |
|---|---|---|
| அண்ணா | 461 | 385 |
| கோவை | 381 | 307 |
| செங்கல்பட்டு | 430 | 517 |
| தர்மபுரி | 286 | 273 |
| கன்னியாகுமரி | 531 | 394 |
| காமராசர் | 574 | 373 |
| மதுரை | 461 | 362 |
| வடாற்காடு | 283 | 343 |
| பசும்பொன் முத்துராமலிங்கம் | 405 | 325 |
| பெரியார் | 428 | 300 |
| புதுக்கோட்டை | 307 | 331 |
| ராமநாதபுரம் | 459 | 406 |
| சேலம் | 354 | 279 |
| தென்னாற்காடு | 353 | 514 |
| தஞ்சை | 456 | 565 |
| திருநெல்வேலி | 382 | 381 |
| திருச்சி | 226 | 345 |



## நேருசிலை: பிரதமர் ராஜீவ் 21-ம் தேதி திறக்கிறார் புரட்சித்தலைவர் ஏற்பாடு

சென்னை, டிச 10-

ஆசியஜோதி, மனிதகுல மாணிக்கம் பண்டித ஜவகர்லால்நேரு சிலையை சென்னை நகரில் 21ம் தேதி மாலை பிரதமர் திறந்து வைக்கிறார்.

நேரு சிலை சென்னை நகரில் தெற்கு நுழைவு வாயிலில் கிண்டி அருகே வைக்கப்படுகிறது,

முதல்வர் புரட்சித்தலைவர் ஆணைப்படிபிரதமர் ராஜீவ் காந்திக்கு அழைப்பு இதழை அமைச்சர் வி. வி.சுவாமிநாதன் நேரில் கொடுத்துள்ளார்.

பிரதமர் ராஜீவ்காந்தி 21 ம் தேதி காலை 11,30 மணிக்கு டெல்லியில் இருந்து புறப்பட்டு பிற்பகல் 2.30 மணிக்கு திருச்சி வருகிறார்.

அங்கிருந்து ஹெலிகாப்டர் மூலம் புதுக்கோட்டை செல்கிறார், அன்று மாலை 3மணி முதல் 4 மணி வரை சத்தியமூர்த்தி நூற்றாண்டுவிழாவில் கலந்து கொண்டு சத்தியமூர்த்தியின் சிலையை திறந்து வைக்கிறார்.

பிறகு மாலை 5 மணிக்கு சென்னை விமான நிலையம் வந்து சேருகிறார்.

மாலை 5.15 முதல் 6,15 வரை நேருசிலை திறப்புவிழா நடைபெறுகிறது பிரதமர் ராஜீவ்காந்தி நேரு சிலையை திறந்து வைக்கிறார்.

மாலை 6.45முதல் 7.45 வரை கலைவாணர் அரங்கில் நடைபெறும் ஆந்திர மகிள சபைபொன்விழாவில் கலந்து கொள்கிறார்.

### பக்தவத்சலம் படத் திறப்பு

இரவு 8 மணிக்கு கிண்டி ராஜ்பவனில் மைலாப்பூர் அகாடமி சார்பில் முன்னாள் முதல்வர் பெரியவர் பக்தவத்சலம் படத்தை திறந்து வைக்கிறார்,

22ம் தேதி கலைவாணர் அரங்கில் கணிதமேதை சீனிவாச ராமானுஜம் நூற்றாண்டு விழாவை ஒட்டி நடைபெறும் சர்வதேசக் கருத்தரங்கில் கலந்து கொள்கிறார்.

10.15மணிக்கு எழும்பூர் மாண்டியத் ரோடில் இந்திய செஞ்சிலுவைச்சங்க கட்டிட திறப்பு விழாவில் பங்கேற்கிறார்.

11.15மணிக்கு புதுக்கல்லூரியில் இந்திய முஸ்லீம் கட்சி 8-வது தேசிய மாநாட்டை தொடங்கி வைக்கிறார.

பகல் 12மணிக்கு தேனாம் பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் காங்கிரஸ் தொண்டர்கள் கூட்டத்தில் பேசுகிறார்.

பிறகு விமானம் மூலம் டெல்லி செல்கிறார்.

இவ்வாறு வி.வி. சுவாமிநாதன் கூறினார்.

ஜவஹர்லால் நேரு முழு உருவச்சிலையை திறந்து வைக்க வரவேண்டும் என முதல்வர் புரட்சித்தலைவா கேட்டுக் கொண்டதற்கு இணங்க பிரதமர் ராஜீவ் வருகிறார்.



## திடீர் தேர்தலா? மூப்பனார் மறுப்பு

புதுடெல்லி,டிச.10

காங்கிரஸ் கட்சி சட்டமன்றத் தொகுதிமற்றும்நாடாளுமன்ற தொகுதிகளில் முக்கியமானவர்களின் பெயர்களை தயாரித்து வருகிறது.

இது குறித்து காங்கிரஸ் செயலாளர் மூப்பனார் மற்றும் ஆசாத் ஆகியோர் கூறுகையில் இத்தகைய பட்டியல் தயாரிப்பது வழக்கமானப் பணிதான் என குறிப்பிட்டனர்.

காங்கிரஸ் எம்.எல்,ஏக்கள் எம்.பிக்கள் தங்கள், தங்கள் தொகுதிகளில் உள்ளமுக்கியமான கட்சியினர் 15பேர்களைத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளதாக மற்றொரு செயலாளரான சதுர்வேதி நிருபர்களிடம் கூறினார்.

## வாலிபர் சாவு: போலீஸ் விசாரணை

சென்னை, டிச. 10-

சென்னையில் 4-வது மாடியில் இருந்துவிழுந்து வாலிபர் ஒருவர் இறந்தார்.

சென்னை ஜெனரல் பேட்டர்ஸ் தெருவில் உள்ளவிடுதி ஒன்றின் 4-வது மாடியில் இருந்து சதீஷ் [வயது-30] என்பவர் விழுந்து இறந்தார்.

இவர் பஞ்சாபைச் சேர்ந்தவர் என்றும் இவரோடு மற்றொருவரும் தங்கியிருந்ததாகவும் கூறப்படுகிறது,

இவர் மரணம் குறித்து போலீசார் விசாரித்துவருகின்றார்கள்.

## ஊனமுற்ற குழந்தைகள் பிறப்பது ஏன்? எலியை வைத்து இந்திய விஞ்ஞானிகள் சோதனை

ஹைதராபாத், டிச 10-

குழந்தைகள் பிறக்கும்போது ஊனத்துடன் ஏன் பிறக்கின்றன என்பதுபற்றி சுண்டெலி மூலம் மருத்துவ விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து வருகின்றனர்.

குழந்தைகள் பிறக்கும் போதே ஊனத்துடன் பிறப்பது என்பது இன்று உலகம் முழுவதும் அதிகரித்து வருகிறது. இந்தக் குறையைப் போக்கும் முயற்சியில் விஞ்ஞானிகள் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.

கருத்தரிப்புக்கு காரணமான உயிரணுக்களில் ஏற்படும் கோளாறு காரணமாகவே குழந்தைகள் ஊனமுற்று பிறக்கின்றன என்பதை விஞ்ஞானிகள் அறிந்துள்ளனர்,

சுண்டெலியின் விந்தில் மனித விந்தை செலுத்தி விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்தபோது சாதாரணமாக இருக்கும் அளவைவிட மூன்று மடங்குஎடை உள்ள பெரிய எலியாக பிறந்தது.

கருத்தரிப்புக்கு காரணமான உயிரணுக்கள் தான் ஆரோக்கியமான அல்லது ஊனமுற்ற குழந்தைகள் உருவாக காரணமாக இருக்கிறது என்பதையும் விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளனர் மண்டை ஓடு இல்லாத சுண்டெலியை பிறக்கவைக்கும் முயற்சியில் பேராசிரியர் டாஸ்ப் ஜென்னிச் முயற்சித்து வருகிறார.

## சாராயம் கடத்திய காரை போலீசார் துரத்தி பிடித்தனர்

சென்னை,டிச,10-

சென்னையை அடுத்துள்ள சில இடங்களில் சாராயத்தை கடத்தியதாக ஒரு காரையும் மூன்றுபேரையும் போலீசார் பிடித்துள்ளனர்.

கவரப்பேட்டை சத்தியவேடு ஆகிய இடங்களில் சாராயம் கடத்தப்படுவதாக போலீசுக்கு தகவல் வந்தது, இதையடுத்து டி.ஐ,ஜிஅலெக்சாண்டர் உத்தரவின் பேரில் போலீசார் அந்தப் பகுதிகளில் கார்களை மடக்கி சோதனை போட்டனர். அப்போது ஒரு கார் வேகமாக வந்தது. போலீசார் தடுத்து நிறுத்த முயன்ற போதும் நிற்காமல் கார் வேகமாக சென்றது.

உடனே போலீசார் அந்தக் காரை 4 கிலோ மீட்டர் தூரம் துரத்திச் சென்று பிடித்தனர்,

அநத காரில் 1200 பாக்கெட் ஆந்திரச் சாராயம் இருந்தது. இதுதொடர்பாக டிரைவர் கபாலி மற்றும் ஜானு, சண்முகம் ஆகியோரை போலீசார் கைது செய்தனர். கடத்தலுக்கு பயன்படுத்தப்பட்ட காரும் பறிமுதல் செய்யப்பட்டது.

## அமெரிக்கா-ரஷ்யா நேரடி விமானம்

வாஷிங்டன்,டிச. 10-

அமெரிக்காவும்,ரஷ்யாவும், தனதுஇருநாடுகளுக்கிடையே நேரடி விமானப் போக்குவரத்தை தொடங்கும் ஒப்பந்தத்தில்இன்று கையெழுத்திட்டது.

இந்த ஒப்பந்தப்படி நியூயார்கிற்கும் மாஸ்கோவிற்கும்செல்லும் விமானம் வேறு எந்த இடத்திலும் நிற்காமல் சென்றடையும் இதுவர்த்தக ரீதியில் மிகவும் பயன்தரத்தக்கவகையான விஸ்தரிப்பு திட்டம் என்று ஒப்பந்தம் கூறுகிறது.

## ரீகன் - கோர்பசேவ் மனைவிமார் மோதலா?

வாஷிங்டன், டிச, 10-

அமெரிக்க ஜனாதிபதி ரீகன்மனைவி நான்சிக்கும் ரஷ்யத் தலைவர் கோர்பசேவ் மனைவி ரெய்சாவுக்கும் மோதல் என்று அமெரிக்க பத்திரிகைகள் செய்தி வெளியிட்டன.

இது பற்றி ரீகன்மனைவி நான்சியிடம் நிருபர்கள் கேட்டனர்.

"இது அபத்தமான செய்தி நாங்கள் இருவரும் ஒன்றாகத் தான் நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டோம். எங்களுக்குள் எந்த பிரச்சினையும் இல்லை என்றார.

மற்றொரு முறை நிருபர்கள் வேறொரு இடத்தில் இதே கேள்வியை நான்சியிடம் கேட்டனர். இந்தக் கேள்விக்குப் பலமுறை பதிலளித்து விட்டேன், என்று அவா கூறினார்,

கோர்பசேவ் மனைவி ரெய்சாவிடம் நிருபர்கள் இதுபற்றி கேட்டபோது 'நாங்கள் அமெரிக்காவுக்கு வந்துள்ள விருந்தாளி. எங்களை இங்கு அழைத்துள்ள ரீகனின் துணைவியார் கூறியது தான் சரியானது'' என்றார்.

1985ல் ஜெனிவாவில் நான்சியும் ரெய்சாவும் சந்தித்துப்பேசியுள்ளனர்.



ஆவடியை அடுத்த திருமுல்லை வாயிலைச் சேர்ந்த நூறு பேர் தி.மு.க. விலிருந்து விலகி கழகத்தில் மூத்த துணைப் பொதுச் செயலாளர் இராகவானந்தம், துணைப் பொதுச் செயலாளர் ஹண்டே, பொருளாளர் மாதவன் கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா எம்.பி. தலைமை நிலையச் செயலாளர் அரங்கநாயகம், அமைப்புச் செயலாளர் சத்தியவாணிமுத்து இளைஞர் அணிச் செயலாளர் ஜே. சி டி. பிரபாகரன், பேரவை பொதுச் செயலாளர் வேல்முருகன், மாணவர் அணி செயலாளர் லியாகத்அலிகான் ஆகியோர் முன்னிலையில் இணைந்தனர். ஆவடி சோமுசா. முல்லை, தயாளன் ஆகியோர் உடனிருந்தனர்.

# அறுபடை வீடு வளாகம்: முதல்வர் அடிக்கல் நாட்ட காஞ்சிபெரியவர்விருப்பம்

சென்னை, டிச. 10-
சென்னை நகரில் அமையும் ஆறுபடை வீடு வளாகத்திற்கு முதல்வர் புரட்சித் தலைவர் அடிக்கல் நாட்ட வேண்டும் என்று காஞ்சிப் பெரியவர் விருப்பம் தெரிவித்துள்ளார்.

இந்த அறுபடை வீடு வளாகம் ரூபாய் ஒரு கோடி செலவில் அமைக்கப்பட்டு வருகிறது.

சென்னை நகரில் ஒரே இடத்தில் ஆறுபடை வீடுகளும் அமையவேண்டும்என்று காஞ்சிப்பெரியவர் விருப்பம் தெரிவித்து இருந்தார்.

இதற்காக தமிழக அரசு நிலத்தை ஒதுக்கியது.

இந்த வளாகத்தில் ஆறு படைகள் என்று அழைக்கப்படும் முருகப்பெருமானது ஆறு திருக் கோவில்களும் அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது.

இதில் திருச்செந்தூர் சுவாமிமலை கோவில்களை அமைக்கும் திருப்பணி 75 சதவிகிதம் முடிந்துவிட்டது.

இந்த வளாகத்திற்கான அடிக்கலை முதல்வர் எம்.ஜி.ஆர் தான் நாட்ட வேண்டும் என்று காஞ்சிப் பெரியவர் விருப்பம் தெரிவித்தார்.

காஞ்சி பெரியவரது விருப்பத்தை முதல்வர் புரட்சித் தலைவரிடம் தெரிவித்துள்ளோம் முதல்வர் புரட்சித் தலைவர் அடிக்கல்லைநாட்டுவார் என்று அமைச்சர் வி.வி, சுவாமிநாதன் கூறினார்.

அமைச்சர் வி. வி. சுவாமி நாதன் மேலும் கூறியதாவது:-

பண்டித ஜவஹர்லால் நேரு சிலையை திறந்து வைக்க பிரதமர் ராஜீவுக்கு அழைப்பு தர நான் டெல்லி சென்று இருந்தேன்.

அப்போது தமிழக மின் சார திட்டங்கள் குறித்து ஒரு கடிதத்தை பிரதமரிடம் கொடுத்தேன்.

பேசின்பிரிட்ஜ் மின் நிலையத்தில் பயன்படுத்த எரிஎண்ணெய் வழங்கவேண்டும்

ஆஸ்திரேலியாவிலிருந்து நிலக்கரி இறக்குமதிக்கு அனுமதி தரவேண்டும்.

நரிமணத்திலும் புவனகிரியிம் கிடைக்கும்எரிவாயுவைப் பயன்பத்தி தலா 5மெகா வாட்உற்பத்திதிறன்கொண்ட மின்நிலையம் அமைக்க அனுமதி தரவேண்டும் என்று அந்த கடிதத்தில் வற்புறுத்தி இருக்கிறோம். பிரதமர் ராஜீவ் நமதுகோரிக்கையை கவனத்துடன் கேட்டார்,

அண்மையில் பெய்த மழையால் நீர்மின் நிலைய உற்பத்தி அதிகரிப்பு சாத்தியக் கூறுகள் பற்றிஇனி தான் தெரியும்.

மின்வெட்டு இப்போதுள்ள நிலைமை தொடரும் இப்போதுள்ள உயர் அழுத்த மின்சாரத்திற்கு 40சதவிகித வெட்டு தொடரும்.

கூடுதலாகமின்சாரம்வேண்டும்என்று கேட்கும் தொழிற்சாலைகள்இரவில் மிச்சமாக இருக்கும் மின் சாரத்தைப் பயன்படுத்தலாம் என்று கூறினோம் இதற்கு



38 நிறுவனங்கள் விண்ணப்பம் அனுப்பியுள்ளன.

ஆலய ஊழியர்கள் மாதம் 10 ரூபாய் கட்டினால் அவர்கள் ஓய்வுபெறும்காலத்தில் 33 ஆயிரத்து 500 ரூபாய் கிடைக்கும் திட்டம் முதல்வர் புரட்சித்தலைவர் அனுமதியோடு செயல்படுத்தப்படும்.

இவ்வாறு அமைச்சர் வி.வி சுவாமிநாதன் கூறினார்.

## ராஜேஷ் தங்கை திருமணம்: புரட்சிதலைவர் வாழ்த்து

சென்னை, டிச. 10-
நடிகர் ராஜேஷின் தங்கை ஐரின் ஜெயராணிக்கும், பிரபாகர் எட்வர்டுக்கும் நேற்றுமாலை சென்னை அசோக்நகரிலுள்ள சி, எஸ்,ஐ. கிறித்தவ தேவாலயத்தில் திருமணம் நடந்தது.

பின்னர் விஜயாராணி மகாலில் வரவேற்பு நடந்தது இந்த நிகழ்ச்சிக்கு முதல்வா புரட்சித் தலைவர் 6.30 மணிக்கு வந்து மணமக்களை வாழ்தினார் சங்கர்கணேஷ் குழுவினரின் இசை நிகழ்ச்சியும் நடைபெற்றது,

அமைச்சர் ப. உ. ச. திருநாவுக்கரசு, முன்னாள் அமைச்சர்கள் கே. ஏ. கே., எஸ்.டி.எஸ்., நடிகர்கள் சத்யராஜ், சிவக்குமார், விஜய்காந்த், பாண்டியராஜன், பாண்டியன். நாகேஷ், கவுண்டமணி, செந்தில், ஜனகராஜ், ஒய். ஜி. மகேந்திரன், நடிகைகள் கே. ஆர். விஜயா, நளினி, பிரமிளா, டிஸ்கோசாந்தி, இயக்குனர்கள் எஸ். பி. முத்துராமன், ஏ. ஜெகநாதன், ஆர், சி. சக்தி, தமிழ்நாடு இளைஞர் காங்கிரஸ் தலைவர் இனியன் சம்பத் உள்ளிட்டோர் பங்கேற்று மணமக்களை வாழ்த்தினர்.

## கஞ்சா அழிப்பு: அதிகாரிகளை சுட்ட கும்பல்

கோவை, டிச. 10-
கஞ்சா பயிரிட்டதை போலீசார் அழித்ததை தொடர்ந்து வன அதிகாரிகள் மீது சமூக விரோதிகள் துப்பாக்கியால் சுட்டனர்.

கோவை மாவட்டம் உடுமலை அருகே கேரள மலையும் கொடைக்கானல் மலையும் சந்திக்கும்இடத்தில் உள்ளது சின்னாறு மஞ்சம்பட்டி மலைப்பகுதி. இங்கு அம்புக் கல்பாறை என்ற இடத்தில் 50 ஏக்கர் நிலப்பரப்பில் கஞ்சா பயிரிட்டு இருப்பதாக மதுவிலக்கு போலீசாருக்கு தகவல் வந்தது. துப்பாக்கி ஏந்திய போலீசார் 200 பேர் போலீஸ் சூப்பிரெண்டு ராஜேந்திரன் தலைமையில் சென்று 2 அடி உயரத்துக்கு வளர்ந்து நின்ற கஞ்சா செடிகள் அனைத்தையும் அழித்தது தெரிந்ததே.

அதில் ஒருவர் மட்டும் அகப்பட்டு இருந்தார் மற்றவர்கள் தலைமறைவாகி விட்டனர். அந்த இடத்தை கண்காணிக்கவும் மற்ற குற்றவாளிகளை கண்டுபிடிக்கும் பணிக்கும், அந்த அரசு நிலத்திற்கு பொள்ளாச்சி பகுதியை சேர்ந்த வனத்துறை அதிகாரிகள் 12 பேர்கள் சென்றனர் அப்போது கஞ்சா கும்பல் அவர்களை நோக்கி துப்பாக்கியால் சுட்டதாக தெரிகிறது. 2 முறை சுட்டு இருக்கிறார்கள் அதிர்ஷ்டவசமாக யார் மீதும் குண்டு பாயவில்லை. 12 பேரும் உயிர் தப்பினர்.

அதற்குள் சுட்ட கும்பல் காட்டுக்குள் தப்பி ஓடிவிட்டனர்.

### மிரட்டல்

கஞ்சா பயிரிட்ட காட்டுக்குபக்கத்தில் உள்ள கிராமத்து மாடுகள் கஞ்சா பயிரை மேய்ந்து விடுவது உண்டு. எனவே 17 மாடுகளை கஞ்சா கும்பல் வெட்டிக் கொன்று தலையை மட்டும் பாறை மீது வைத்திருந்தனர். இது பற்றி போலீசில் புகார் செய்வோம் என்று கிராமவாசிகள் கூறினர். போலீசாரோ அதிகாரிகளோ இங்கு வந்தால் ஒவ்வொருவரையும் சுட்டுக் கொன்று விடுவோம் என்று அந்த கும்பல் மக்களை மிரட்டுமாம்.

இந்த சம்பவம் அந்த வட்டாரத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது,

## வாலிபர் கொலை: ஐவர் கைது

சென்னை, டிச, 10-
காசிமேட்டைச் சேர்ந்தவர் பாஸ்கரன் அவரது மனைவி லில்லியுடன் சைக்கிளில் சென்று கொண்டிருந்தபோது நாராயணன் என்பவர் ஒரு கும்பலோடு வந்து பாஸ்கரன் மற்றும் லில்லியை கத்தியால் குத்தினார்களாம். பாஸ்கரன் இதில் மரணமடைந்தார் கத்திக்குத்தில் காயமடைந்தலில்லிமருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகின்றார் அவர் கொடுத்த தகவலின் பேரில் காசிமேடு இன்ஸ்பெக்டர் வீரமணி நாராயணன்உள்பட 5பேரை கைது செய்தார்.

## தஞ்சையில் கழகத்தில் இணைந்த தி.மு.க. வினர்

தஞ்சாவூர், டிச, 10-
தஞ்சை கீழவாசல் தெருவில் அமரர் யாகப்பா சேவியர் நினைவுக் கம்பத்தில் கழக கொடியை அமைச்சர் ராமசாமி ஏற்றி வைத்தார்.

விழாவில் அமைச்சர் முன்னிலையில் தி.மு.க.விலிருந்து விலகி 9 பேர் கழகத்தில் இணைந்தனர்.

விழாவில் மாவட்டப் பிரதிநிதி தம்பிமோகன் மாவட்டச்செயலாளர் சுவாமிநாதன் ஆகியோர் பங்கேற்றனர்.

## ரூ. 2 ஆயிரம் கோடியில் நவீன கடற்படை தளம்

சென்னை, டிச, 10-
கார்வாரில் ரூபாய் 2 ஆயிரம் கோடி செலவில் நவீன கப்பல்படை தளம் அமைக்கப்படுகிறது.

மேற்கு கடற்கரையில்இந்த தளம் கட்டும் வேலை இரண்டு ஆண்டுகளில் தொடங்கும்.

டைரக்டர் ஜெனரல் எஸ் கே. சந்த் இந்த தகவலை தெரிவித்துள்ளார்.

இரண்டு கட்டங்களில் 15 ஆண்டுகளில் ரூபாய் 350 கோடி செலவில்1995-ம் ஆண்டு இது கட்டிமுடிக்கப்படும் என்றும் அவர் கூறினார்.





## பயங்கரவாத செயல்: பாகிஸ்தானுக்கு சென்று சீக்கியர் பட்ட கொடுமை

ஹோஷியாபூர் ,டிச.10-
இந்தியாவுக்குள் வன்முறை சம்பவங்களை நடத்த சீக்கியர்களுக்கு பாகிஸ்தான் பயிற்சி அளிக்கிறது அல்லவா? அப்படி பயிற்சிக்காக சென்ற ஒரு சீக்கியர் குற்றுயிரும் குலைஉயிருமாக இந்தியாவுக்கு திரும்பினார்.

அவர் தனது துயரக் கதைகளை கூறினார்.

அவர் பெயர் சுர்ஜித். வயது 30. பஞ்சாபிலுள்ள ஹோஷியாபூர் அரசு கல்லூரியில் எம்.ஏ. படித்து வந்தார்.

சுர்ஜித்துக்கு வேண்டிய நண்பர் ஒருவர் ஒருபாங்கு கொள்ளை வழக்கில் சம்பந்தபட்டார். அந்த வழக்கில் சுர்ஜித்தையும் போலீசார் தேடி வந்தனர்.
உடனே சுர்ஜித் அங்கிருந்து ஓட்டம் பிடித்து அமிர்தசரஸ் பொற்கோவிலுக்குள் தஞ்சம் புகுந்தார்.

தகவலறிந்த சுர்ஜித்தின் பெற்றோர்கள் பொற் கோவிலுக்குள் சென்றனர் அங்கிருந்த கன்வர்சிங் என்பவர் அவர்களை கடுமையாக மிரட்டினார் பின்னர் சுர்ஜித் பாகிஸ்தானுக்குபயிற்சிக்காக அனுப்பப்பட்டார். அங்கு ஐந்துமாதம்அவருக்கு பாகிஸ்தான் சிப்பாய்கள் நல்ல உணவுகொடுத்தனர்.

அதன்பின் தினமும் அடி உதைதான் அவர்களை சிறையில் போட்டு அடித்து உதைத்தார்கள். ஒழுங்கான சாப்பாடுகூட போடவில்லை:

மேலும் பல சீக்கிய இளைஞர்களுக்கும் அங்கு பயிற்சி கொடுக்கப்பட்டது. எல்லாரும் அடி-உதை வாங்கிக் கொண்டு பயிற்சி பெற்றனர்

ராணுவத்தில் கிடைக்கிற அடியாயிற்றே சீக்கிய இளைஞர்களின் எலும்புகள் பொடி பொடியாகியுள்ளன.

குற்றுயிராகக் கிடந்த அவர்களை ஆஸ்பத்திரிக்கு கொண்டு செல்லவில்லை.

தம்பி ஓட முயன்ற இருவரை சுட்டு கொன்று விட்டார்கள்.

இந்த நிலையில் சீக்கிய தீவிரவாதிகள் வந்து அவர்களை இந்தியாவுக்கு எதிராக மூளை சலவை செய்யும் வேலையில் இறங்கினர்.

பின்னர் பைஸ்லாபாத் ஆஸ்பத்திரியில் சுர்ஜித்தும் மற்றவர்களும் சேர்க்கப் பட்டனர். அங்கிருந்து இந்தியாவுக்கு அவர்கள் தப்பி வந்தனர்.

நமது எல்லை பாதுகாப்பு படையினர் அவர்களை பிடித்து அமிர்தசரஸ் போலீசில் ஒப்படைத்தார்கள். போலீசாரிடம் சுர்ஜித் தனது சோகக் கதைகளை கூறினார் பின்னர் சுர்ஜித் தனது பெற்றோர்களிடம் ஒப்படைக்கப் பட்டார்.

## தமிழகத்தில் அனைத்து கிராமங்களிலும்மின் வசதி

புதுடெல்லி, டிச. 10-
தமிழ்நாடு, கேரளம், பஞ்சாப், அர்யானா ஆகிய மாநிலங்களில் உள்ள கிராமங்கள் அனைத்திற்கும் 100 சதவீத மின்சார வசதி ஏற்படுத்தப்பட்டுள்ளது. குஜராத். கர்னாடகா, இமாசலப்பிரதேசம் ஆகிய மாநிலங்களுக்கு அடுத்த ஆண்டு மார்ச் மாதத்திற்குள் 100 சதவீத கிராமப்புற மின்இணைப்பு வழங்கப் பட்டுவிடும்,

தற்போதுநாடுமுழுவதும்73 சதவீத கிராமங்களுக்கு மின் வசதி ஏற்படுத்தப்பட்டுள்ளது

மத்திய எரிசக்தித்துறை அமைச்சகத்துக்கான ஆலோசனைக்குழுக் கூட்டத்தில் உரையாற்றிய மத்திய எரிசக்தித்துறை அமைச்சர் வசந்த் சாத்தே இத்தகவல்களைத் தெரிவித்தார்.

7-வது ஐந்தாண்டுத் திட்டகாலத்திற்குள் 83 சதவீத கிராமங்களுக்கு மின்வசதி ஏற்படுத்தித்தர திட்டமிடப்பட்டுள்ளது என்றும் அவர் தெரிவித்தார். ஊரக மின்மயமாக்கும் திட்டங்கள் பின்தங்கிய பகுதிகளிலும் பழங்குடியினர் வாழும் பகுதிகளிலும் முன்னுரிமை அடிப்படையில் நடைமுறைப் படுத்தப்பட்டு வருகின்றன.

மின்இணைப்புவழங்கப்பட்டுள்ள வேளாண்மை பம்பு செட்டுகளின் எண்ணிக்கை 68.5 லட்சம்ஆக அதிகரித்துள்ளது என்று குறிப்பிட்ட அமைச்சர் 1989-90, ஆம் ஆண்டில் இதுமேலும் 20லட்சம்அதிகரிக்குமென்று எதிர் பார்க்கப்படுவதாக கூறினார்.

இக்கூட்டத்தில் பங்கு பெற்ற எரிசக்தித்துறை இணையமைச்சர் சுசிலா ரோட்டகி கிராமப்புற மின்மயமாக்குதல் என்பது மறுவரையறை செய்யப்பட வேண்டும் என்று கருத்துத் தெரிவித்தார் தற்போது ஒரு கிராமத்தின் எல்லைக்குள் குறைந்த அழுத்த மின்னிணைப்பு வழங்கிவிட்டு கிராமம் முழுவதற்கும் மின்வசதி ஏற்படுத்தித் தந்துள்ளதாக கூறிக்கொள்கிறோம். இதை மாற்றி கிராமத்தில் வாழ்கின்ற அனைவருடைய தேவையையும் பூர்த்தி செய்கின்ற அளவில் மின்சார சப்ளைவழங்கப்பட வேண்டும்என்று சுசீலாரோடகி கூறினர்.

## முன்னாள் போலீஸ் அதிகாரியிடம் மோசடி: 2 பேர் கைது

சென்னை, டிச. 10-
கூடுதல் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலாக பணியாற்றி ஓய்வு பெற்றவர் தேவசகாயம் இவர் எழும்பூரிலுள்ள தனது வீட்டை பல மாடி கட்டிடமாகக் கட்ட திட்டமிட்டாராம்- அப்போது சந்திரன் என்பவரும் சபியுல்லா என்பவரும் எம்எம்டிஏ அனுமதி பெற்றுத் தருவதாகக் கூறினார்களாம்.

எம்எம்டிஏ போலி அனுமதியை தேவசகாயத்திடம் கொடுத்து 25700 ரூபாய் இவர்கள் பெற்றனராம்இதற்கிடையில் தேவசகாயம் வீடு கட்ட முயன்றபோது எம்எம்டிஏ வினர் ஆட்சேபம் தெரிவித்தனராம் தேவசகாயம் தான்ஏமாற்றப்பட்டதை அப்போதுதான் உணர்ந்தார்.

இது தொடர்பாக மத்திய குற்றப்பிரிவில் அவர் புகார் செய்தார். சந்திரனையும் சபியுல்லாவையும் கைது செய்து சப்-இன்ஸ்பெக்டர் சந்திரசேகர் இது பற்றி விசாரித்து வருகிறார்.



## கழகத்தில் இணைந்த தி. மு. க. வினர்

மதுரை டிச, 10-
மதுரை 54 வது வட்டத்தைச் சேர்ந்த தி.மு.க இளைஞர்கள் 13 பேர் அக்கட்சியிலிருந்து விலகி சென்னை மாவட்ட கழக செயலாளர் ஜேப்பியார் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்,

## ஒரே குடும்பத்தைச் சேர்ந்த 15 பேருக்கு ஆயுள் தண்டனை

மதுரை, டிச. 10-
மதுரை நீதிமன்றத்தில் நிலத்தகராறு சம்பந்தப் பட்ட கொலை வழக்கு ஒன்றில் ஒரே குடும்பத்தைச் சார்ந்த 15 பேருக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது.

இதுபற்றிய விவரமாவது-: முதுகுளத்தூர் போலீஸ் சரகம் செல்வநாயகபுரத்தை சேர்ந்தவர் கூடலிங்கம் இவருக்கு சொந்தமான நிலம் ஊடு பொட்டல்காடு என்ற இடத்தில்உள்ளது. இதில் உள்ள கருவேலம் மரங்களை வெட்டும் உரிமையை 3 ஆண்டுகளுக்கு கிருஷ்ணன் என்பவருக்கு கூடலிங்கம் கொடுத்தார்.

இதே ஊரைச்சேர்ந்த அழகுமகனார் மகன்கள் நாகராசன், ராமச்சந்திரன், வேணு பாலகிருஷ்ணன் இந்த நிலத்தில் தங்களுக்கும் பங்கு இருப்பதாக கூறினார்கள். இதனால் விரோதம் ஏற்பட்டு தகராறு ஆனது. காவல் துறையில் புகார் செய்யப்பட்டது.

1985-ம் ஆண்டு ஜூலை மாதம் 30ந்தேதி கிருஷ்ணன் மற்றும் அவரை சேர்ந்தவர்கள் கருவேலம் மரங்களை வெட்டிக்கொண்டிருந்த போது ராமச்சந்திரனும் அவரது சகோதரர்களும்அங்கு சென்று தகராறு செய்தனர் இந்த தகராறின்போதுராமச்சந்திரனின் ஆதரவாளர்கள் மறைந்து இருந்து கூடலிங்கத்தையும் அவரது மகனையும் தாக்கினார்கள். கூடலிங்கம் சம்பவம்நடந்த இடத்திலேயே இறந்து போனார். இச்சம்பவம் தொடர்பாக முதுகுளத்தூர் போலீசார் 50 பேர் மீது வழக்கு தொடர்ந்தனர். இவர்களில் 32 பேர் கைது செய்யப்பட்டு இராமநாதபுரம் அடிசனல் செசன்ஸ் கோர்ட்டில்ஆஜர்படுத்தப்பட்டனர். இந்த வழக்கை விசாரித்த நீதிபதி டேவிட் கிறிஸ்டியாகுற்றம் சாட்டப்பட்ட 32பேரில் 15 பேருக்கு ஆயுள் தண்டனை விதித்து மீதமுள்ளவர்களை விடுதலை செய்து தீர்ப்பளித்தார் இந்த 15 பேரில் ராமச்சந்திரன் நாகராசன்,பாலகிருஷ்ணன், கார்மேகம் அனைவரும் அண்ணன் தம்பிகள் மற்ற 11 பேரும் இவரது உறவினர்கள் அண்மையில் மதுரை மாவட்ட நீதிமன்றத்தில் நடந்த வழக்குகளில் ஒரே குடும்பத்தை சேர்ந்த 15 பேருக்கு ஆயுள் தண்டனை கொடுத்தது இதுதான்.

## சமூக நலத் துறை

அரசாணை (நிலை) எண் 2026
நாள்: 28-10 87
நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 4-ஆம் பிரிவின் கீழான

# அறிவிக்கை

வட ஆற்காடு மாவட்டம் வந்தவாசி வட்டம் மருதாடு கிராமத்தில் அமைந்துள்ளதும் கீழ்காணும் விவர அட்டவணையில் குறிப்பிட்டதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது மருதாடுகிராம ஆதிதிராவிடர்கள் மற்றும்ஆதிதிராவிட கிறிஸ்தவர்களுக்கும் மயானம் தேவைபடுகின்றன என்று தமிழ்நாட்டு அரசுக்குத் தோன்றுவதால் அந்தப்படிக்கு 1894 ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச் சட்டம் 1-1894) 4ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் விதித்துறைகளுக்கிணங்க தொடர்புடைய அனைவருக்கும் இதன் மூலம் அறிவிப்பு அளிக்கப்படுகிறது. ஆகவே மேற்சொன்னச் சட்டத்தின் 4 ஆம் பிரிவின் (2)ஆம் உட்பிரிவின் கீழ் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களை செலுத்தும் பொருட்டு தனி வட்டாட்சியர் (ஆதிதிராவிடர் நலம்) வந்தவாசி என்பவருக்கும் அவருடைய பணியாளர், தொழிலாளர் ஆகியோருக்கும் தமிழ்நாட்டு ஆளுநர் அவர்கள் இதனால் அதிகாரமளிக்கிறார்.

விவர அட்டவணை

மாவட்டம்: வடஆற்காடு வட்டம்: வந்தவாசி
கிராமம்: மருதாடு

| நன்செய் (அ)புன்செய் என்ற நிலத்தின் விவரிப்பும் புலஎண்ணும் | நிலச் சொந்தக்காரரின் (பட்டாதாரரின்) அல்லது அனுபவதாரரின் பெயர் | கையகப்படுத்த உள்ள பரப்பளவு | தீர்சா அல்லது பயிரிடத் தக்கதா? [மரங்கள் கட்டிடங்கள் கிணறுகள் குறிப்பிடவும்] |
|---|---|---|---|
| புன்செய் 87-2பில் | திரு எம். சி. வேலப்பன் த-பெ சின்னப்பா 1. திருமதி மாரியம்மாள் க-பெ எம்.சி.வேலப்பன் 2 | 0.42 | பயிரிடத்தக்கது மரம், கட்டிடம், கிணறு இல்லை |
| | | 0.42 ஏக்கா | |

சோ. குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளா
சமூக நலத்துறை

DIPR 448-NA-87-maa

## சமூக நலத் துறை

அரசாணை (நிலை)எண் 2030
நாள் 28 10 87
நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 4 ஆம் பிரிவின் கீழான

# அறிவிக்கை

வடஆற்காடு மாவட்டம் ஆற்காடு வட்டம் வேம்பி கிராமத்தில் அமைந்துள்ளதும் கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிட்டுள்ளதுமான நிலம் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது ஆதி திராவிடர்களுக்கு வீட்டு மனை வசதிக்காக தேவைப்படுகிறது என்று தமிழ்நாடு அரசுக்கு தோன்றுவதால் அந்தபடிக்கு 1894 ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் [மையச் சட்டம் 1-1894] 4-ஆம் பிரிவின் [1]ஆம் உட்பிரிவின் விதிமுறைகளுக்கிணங்க தொடர்புடைய அனைவருக்கும் இதன்மூலம் அறிவிப்பு அளிக்கப்படுகிறது. ஆகவே மேற்சொன்ன சட்டத்தின் 4-ஆம் பிரிவின் [2]ஆம் உட்பிரிவின் கீழ் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களைச் செலுத்தும் பொருட்டு வேலூர் ஆதி திராவிடர் நல தனி வட்டாட்சியர் என்பவருக்கும், இவருடைய பணியாளர், தொழிலாளர் ஆகியோருக்கும் தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் இதனால் அதிகாரமளிக்கிறார்.

விவரஅட்டவணை

வடஆற்காடுமாவட்டம் ஆற்காடுவட்டம்
வேம்பி கிராமம்

| நன்செய் அல்லது புன்செய் என்ற நிலத்தின் விவரிப்பும் புல எண்ணும் | நிலச் சொந்தக்காரரின் [பட்டாதாரரின்] அல்லது அனுபவதாரரின் பெயர் | கையகப்படுத்த உள்ள பரப்பளவு (ஹெக்டேரில்) | தரிசா அல்லது பயிரிடத் தக்கதா? [மரங்கள்கட்டிடங்கள் ஆழ்துளைகள் இணைறுகள் குறிப்பிடவும்] |
|---|---|---|---|
| புன்செய் 41-1ஏ | ரவிச்சந்திரன் மற்றும் பலர் | 0.04.5 | |
| புன்செய் 41-1பி | ரவிச்சந்திரன் மற்றும் பலர் | 0.41.5 | |
| புன்செய் 42-4ஏ | சத்தியமூர்த்திமற்றும் பலர் | 0.16.0 | |
| புன்செய் 42-4பி | ரவிச்சந்திரன் | 0.16.5 | |
| | மொத்தம் | 0.78.5 | |

சோ. குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளர்
சமூகநலத் துறை

DIPR-440-NA-87 Maa

Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029.

# ஏவுகணைகள் அழிப்பு விரைவில் துவங்கும்

வாஷிங்டன், டிச. 10- அணு ஆயுதத்தை அறவே ஒழிக்க ரஷ்யாவும் அமெரிக்காவும் முதல் ஏற்பாடுகளைச் செய்துள்ளன.

இந்த உடன்படிக்கையின் மூலம் கூண்டம் ... ட்டு கண்டா தவும் ஏவுகணைகள் அழிக்கப்படுகின்றன. மொத்தம் 261 ஏவுகணைகளைரஷ்யாவும் அமெரிக்காவும் அழிக்கின்றன. இதில் 1752 ராக்கெட்டுகள் ரஷ்யாவுக்குச் சொந்தமானவை 859 ராக்கெட்டுகள் அமெரிக்காவுக்குச் சொந்தமானவை.

இந்த ஏவுகணைகளை பாலைவனத்தில் அல்லது கடலில் போட்டு அழிப்பார்கள்.

ஆயுதஒழிப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட டிசம்பர் 8-ந்தேதி உலக வரலாற்றின் பொன்னான எழுத்துக்களில் பொறிக்கப்பட வேண்டிய நாள் என்று அமெரிக்க ஜனாதிபதி ரீகன் குறிப்பிட்டுள்ளார்.

## பாராட்டு

இந்திய நாடாளு மன்றத்தில் இந்த உடன்படிக்கையை வரவேற்று உறுப்பினர்கள் பேசினார்.

ரீகன் கோர்பசேவ் ஒப்பந்தம் என்று சொல்லக் கூடாது கோர்பசேவ் தான் இதற்கு பெரு முயற்சி எடுத்தார் எனவே கோர்பசேவ் ரீகன் ஒப்பந்தம் என்றுதான் கூறவேண்டும் என்று மாநிலங்களவையில் கழக உறுப்பினர் ஆலடி அருணா மார்க்சிஸ்ட் உறுப்பினர்கள் தீபன் கோஷ் நிர்மல் சட்டர்ஜி ஆகியோர் கூறினர். அவைத்தலைவர் சங்கர் தயாள் சாமா அந்த உடன்படிக்கையை வரவேற்றுப்பேசினார்.

மக்களவையில் பிரதமர் ராஜீவ்காந்தி ஆயுத கட்டுப்பாட்டு உடன்பாட்டை வரவேற்றுப் பேசினார் அணு ஆயுதங்களை அறவே ஒழிப்பதற்கு இந்த உடன்பாடு முன் ஏற்பாடாக அமைகிறது என்று பிரதமர் குறிப்பிட்டார்.

## முக்கிய ஆலோசனை

இதற்கிடையில் கோர்பசேவும், ரீகனும் வாஷிங்டனில் முக்கிய ஆலோசனை நடத்தினர், ஆப்கானிஸ்தான், மத்திய அமெரிக்கா, ஆப்பிரிக்கா ஆகிய நாட்டு விவகாரங்களில் ரஷ்யா அல்லது அமெரிக்கா ஏதோ ஒரு வகையில் சம்பந்தப்பட்டுள்ளன. அந்தப் பிரச்சினைகளைத்தீர்ப்பது குறித்து அவர்கள்ஆலோசனை நடத்தினர்.

ஆப்கானிஸ் தானிலிருந்து வெளியேறத்தயாராக இருப்பதாக ரஷ்யா அறிவித்துள்ளதாகத்தெரிகிறது.

# பின்தங்கியபகுதிகளில் தொழில் வளர்ச்சி

சென்னை, டிச 10- தருமபுரி, கன்னியாகுமரி, மதுரை, வட ஆற்காடு ராமநாதபுரம், தென்னாற்காடு, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி புதுக்கோட்டை, ஆகிய மாவட்டங்கள் தொழில் வளர்ச்சியில் பின்தங்கியுள்ள மாவட்டங்களாக கண்டறியப்பட்டுள்ளன இந்த மாவட்டங்களில் தொழில் தொடங்குபவர்கள் மத்திய முதலீட்டு மான்யத்தின் கீழ் சலுகை பெறலாம் மேலும் இம் மாவட்டங்களில் தொழில் தொடங்குவோருக்கு கிடைக்கக்கூடிய சலுகைகளும் வசதிகளும் குறித்த விவரங்கள் பின்தங்கிய பகுதிகளில் தொழிற்சாலைகளுக்கான ஊக்குவிப்புத் திட்டங்கள் என்ற கையேட்டில் விரிவாக கூறப்பட்டுள்ளன அந்த கையேட்டின் பிரதிகளை நாடாளுமன்றத்தின் நூலகத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

நேற்று மக்களவையில் கேள்வியொன்றுக்கு விடையளித்த மத்திய தொழில் வளர்ச்சித் துறை இணை அமைச்சர் எம். அருணாசலம் இத்தகவலைத் தெரிவித்தார்.

கடப்பாண்டில் இதுவரை தமிழ்நாட்டில் 13 தொழிற்சாலை உரிமங்களும். 50 அனுமதிக் கடிதங்களும். தொழில்நுட்ப வளர்ச்சி இயக்கத்திலிருந்து 28 பதிவுகளும் வழங்கப்பட்டுள்ளன என்றும் அமைச்சர் தெரிவித்தார்.

# தாக்கர் கமிஷன் அறிக்கைதாக்கல்

புதுடெல்லி.டிச. 10- அமெரிக்க புலனாய்வு நிறுவனமான பேர்பாக்ஸ் அமைப்பை அமர்த்திக் கொண்டது பற்றி விசாரித்த தாக்கர் கமிஷன் அறிக்கை நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது.

வெளிநாட்டு வங்கிகளில் இந்தியர்கள் பணம் போட்டு வைத்துள்ளார்களா என்பது குறித்து விசாரிக்க அமெரிக்காவைச்சேர்ந்த தனியார் புலனாய்வு நிறுவனமான பேர்பாக்ஸ் கேட்டுக்கொள்ளப்பட்டது.

இந்த அமைப்பை விசாரணைக்காக அமர்த்திக் கொண்டது பற்றி தாக்கர் கமிஷன் விசாரித்தது

இந்தக்கமிஷனின் அறிக்கை நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது.

இந்த அமைப்பை அமர்த்தியது குறித்து பிரதமருக்கும் அமைச்சரவைக்கும் தெரிவிக்கப்படவில்லை என கமிஷன் தெரிவித்துள்ளது.

# 'மனிதன்' திருட்டு வீடியோ கேசட்: ரூ.5லட்சம் அபராதம்

சென்னை, டிச. 10- போதிய அனுமதியின்றி 'மனிதன்' திரைப்பட வீடியோ கேசட்டை விற்றதாக மலேசியாவில் 5லட்சம் ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது சிங்கப்பூரிலும் இதுபோல திருட்டுத்தனமாக மனிதன் பட வீடியோ கேசட்டை விற்றவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டு வருவதாக ஏ.வி.எம் சரவணன் தெரிவித்துள்ளார்.

மனிதன் பட வீடியோ திருட்டை தடுப்பதற்கு பரீட்சார்த்தமாக வீடியோ அனுமதி தராமல் உள்ளோம். வீடியோ திருட்டை ஒழிக்க போலீசார் பெருமளவு ஒத்துழைப்பு தருகின்றனர்,

தூத்துக்குடியில் எங்கள் படத்தை திருட்டுத்தனமாக வீடியோவில் பதிவு செய்தவர்கள் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. இதில் ஒரு கல்லூரி பேராசிரியரே பின்னணியில் இருந்து செயல்பட்டுள்ளார் என்றும் ஏ.வி.எம்.சரவணன் கூறினார்.

## மிருதங்க அரங்கேற்றம்

சென்னை, டிச. 10- செல்வி சரஸ்வதியின் மிருதங்க அரங்கேற்ற நிகழ்ச்சி மயிலை ரசிக ரஞ்சனி சபாவில் நடை பெற்றது.

இந்த நிகழ்ச்சிக்கு டி கே பட்டம்மாள் தலைமை வகித்தார் இந்த நிகழ்ச்சியில் டி வி கோபாலகிருஷ்ணனின் வாய்ப்பாட்டு நிகழ்ச்சி நடைபெற்றது.

வி.தியாகராஜன் வயலின் வாசிக்க டி,வி. வாசன் கடம் வாசித்தார். டி. ஆர். சுந்தரேசன் முகர்சிங்வாசிக்க சியாம் சுந்தர் கஞ்சிரா வாசித்தார்.

டி. வி. கோபாலகிருஷ்ணனுக்கு பாராட்டும் இந்த நிகழ்ச்சியில் நடைபெற்றது. பி. எஸ். தியாகராசன் விசாலம் தம்பதியரின் புதல்விதான்சரஸ்வதி.

## பஸ் விபத்து: 8 பேர் காயம்

சென்னை, டிச. 10 சென்னையைஅடுத்த வண்டலூர்அருகே இரண்டு பஸ்கள் மோதிக்கொண்டன. இந்த விபத்தில் 8 பேர் காயம் அடைந்தனர். இவர்களில் 2 பஸ்களின் டிரைவர்களும் அடங்குவர். காயம்அடைந்த அனைவரும் சென்னை பொது மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகிறார்கள்.

## பொதுப் பணித்துறை

தனிக் கட்டட வட்டம்,
சேலம்-636 007

# டெண்டர் அறிவிப்பு

தமிழ்நாடு ஆளுநருக்காகவும் அவர் சார்பிலும் கீழே குறித்த வேலைகளுக்கு ஒவ்வொரு வேலைக்கு எதிரிலும் குறித்த தேதியில் மாலை 3 மணி வரை முத்திரையிட்ட டெண்டர்கள் கண்காணிப்புப் பொறியாளர், பொதுப் பணித்துறை சிறப்புக் கட்டடங்கள் வட்டம், குமாரசாமி பட்டி சேலம் 636007 அலுவலகத்தில் பெற்றுக் கொள்ளப்பட்டு வருகை தரும் டெண்டர்தாரர் முன்னிலையில் காலம் 6 ல் குறிப்பிட்டுள்ள தேதியில் மாலை 3.15 மணிக்கு கண்காணிப்புப் பொறியாளர் அவர்களால் திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | டேவணித் தொகை | பணி முடிக்க வேண்டிய காலம் | டெண்டர் தேதி |
|---|---|---|---|---|
| 1. | தென்னாற்காடு மாவட்டம் திண்டிவனம் இறையானூரில் அமைந்துள்ள விவசாய பண்ணையில் அரசு அலுவலர் களுக்கு குடியிருப்புகள் கட்டுதல் | 12,500- | 8 மாதங்கள் | 20-1-88 |

6. திறப்பு தேதி : 25.1.88

7. டெண்டர்ஷெட்யூல்கிடைக்கும் காலம் : 28.12.87 முதல் 18.1.88 வரை

8. டேவணி டெண்டர் ஷெட்யூல் விலை சேர்க்க விலசாம் : செயற்பொறியாளர் பொ. ப. து., கட்டடக் கோட்டம், விழுப்புரம்.

9. வகுப்பு புதிய முறையில் ரூ. 25 லட்சம் வரை வகுப்பு I. ஏ அல்லது பழைய முறை ரூபாய் 25 லட்சம் வரை

பொதுப்பணித்துறை இதர இலாகாக்கள் மற்றும் மாநில, மத்திய அரசு நிறுவனங்களில் தக்க வகுப்பிலும் ஒரு படி குறைவு வகுப்பிலும் பதிவு கொண்ட காண்ட்ராக்டர்களுக்கு டெண்டர் பத்திரம் வழங்கப்படும் ஆனால் ஒரு படி குறைவுப் பதிவு செய்து கொண்ட ஒப்பந்தக்காரர்கள் பதிவு செய்யப்பட வேண்டிய வகுப்பின் தொகைக்கு 20 சதவீத சொத்து மதிப்புசான்றிதழின் நகல்கள் ஒப்பந்தப்புள்ளி வேண்டி கோரும் விண்ணப்பத்துடன் இணைத்துக் கொடுக்கப்பட வேண்டும் மேலும் ஒருபடி குறைவு பதிவு செய்த ஒப்பந்தக்காரர்கள் இவ் வகுப்பில் குறைந்த பட்சம் ஒரு வருடமாவது பதிவு ஒப்பந்தக்காரராக இருக்க வேண்டும்.

டெண்டர் அடைபவர் பொதுப்பணித்துறையில் தக்க வகுப்பில் பதிவில்லாதவரானால், வேலை அளிக்கப்படும் முன் தன்னைப் பொதுப்பணித்துறையில் தக்கவகுப்பில் பதிவு செய்துகொள்ளவேண்டும். வரைபடங்களுடன், டெண்டர் பத்திரம் விலை விற்பனைவரி சர்சார்ஜ் உள்பட மேலே குறித்த எல்லா வேலைகளுக்கும் ரூபாய் 105,50 (100.00+5.50) டெண்டர் ஷெட்யூல் விலை ரூபாய் 100- அரசு கருவூலத்தில் செலுத்தகணக்கு8782 ரொக்கம்செலுத்துதல் பி. டபிள்யூ. 111-வரைவுகள் டி. பி. கோடு எண். 8782 00 102 ஏ. டி.0007 சம்பந்தப்பட்ட செயற்பொறியாளர் சேரவும், விற்பனைவரி 5.50ஐ 0040 விற்பனை வரி-டி.பி.கோடு எண்.0040ஏ. ஏ.பி. ஏஏ. 0518 என்பவையாகும்.

வேலைக்காக வரைபடங்களுடன் டெண்டர் ஷெட்யூல். கண்காணிப்புப் பொறியாளர் பொதுப் பணித் துறை சிறப்புக் கட்டடங்கள் வட்டம், குமாரசாமிபட்டி, சேலம் 636007 அலுவலகத்திலும். செயற்பொறியாளர், பொதுப் பணித்துறை,கட்டடக் கோட்டம், மேலே காலம் 8ல் குறித்தபடி அலுவலகத்திலும், மேலே குறித்த தேதிகளில் எந்த வேலை நாளிலும் அலுவலக நேரங்களிலும் பெறலாம், டெண்டர் ஷெட்யூலுக்கான விண்ணப்பத்துடன் சம்பந்தப்பட்ட வகுப்பில் பதிவுக்காக சான்று உண்மை நகல் மற்றும் பெரிய கட்டட வேலைகள் செய்வதற்கான அனுபவ பதிவுச் சான்றும் இணைக்க வேண்டும், தவறினால் டெண்டர் ஷெட்யூல் வழங்கப்பட மாட்டாது.

டெண்டரை நேரில் தரவோ பதிவுத்தபாலில் அக்னாலெட்ஜ்மெண்டுடன் அனுப்பவோ டெண்டர்தாரர் விருப்பப்படி செய்யலாம் பதிவுத்தபாலில் அக்னாலெட்ஜ்மெண்டுடன் அனுப்பும் சமயம் டெண்டர் கடைசி தேதிக்குள் முன்பதிவு செய்திருக்கவேண்டும் டெண்டர் தீர்ப்பு ஆணைக்கு டெண்டர் திறப்பு தேதி மாலை 3மணிக்குள் டெண்டரை சேர்க்க டெண்டர்தாரர் அதை அனுப்புவது அவர் பொறுப்பாகும் குறித்த தேதிக்குள் பின் டெண்டர் கிடைத்தல் போக்குவரத்தில் இழப்பு சம்பந்தமாக எந்த வித முறையீடும் ஏற்கப்படமாட்டாது.

டெண்டர் திறப்புதேதி அரசு விடுமுறை என்று எக்காரணத்திற்காவது அறிவிக்கப்பட்டால் அடுத்த வேலை நாளில் மாலை 3-15 மணிக்குத் திறக்கப்படும்,

காரணம் ஏதும் தெரிவிக்காமல் பெறப்பட்ட எந்த ஒரு டெண்டரையோ அல்லது அனைத்து டெண்டர்களையுமோ நிராகரிக்கவும் மற்றும் டெண்டர் அறிவிப்பை ரத்து செய்யவோ, கண்காணிப்புப் பொறியாளர், பொதுப்பணித்துறை சிறப்பு கட்டட வட்டம், சேலம் அவர்களுக்கு பூரண உரிமையுண்டு.

கண்காணிப்புப் பொறியாளர்

டி.ஐ.பி.ஆர்.-476 தெ.ஆ. 87 எலிகண்ட்

# திருமகள்

## வாராந்திர குலுக்கல் முடிவுகள்

2 வது "திருமகள்" வாராந்திர குலுக்கல் முடிவுகள்:
இடம்: பரிசுச்சீட்டு குலுக்கல் மண்டபம்
நாள்: 9-12-1987 சென்னை-600 002

முதல் பரிசு: ரூ. 1,00,000-
(அனைத்து வரிசைக்கும் பொது)
எப் 134524

ஆறுதல் பரிசு: ரூ. 250-
(முதல் பரிசு பெற்ற வரிசையைத் தவிர மற்ற இரு வரிசைகளுக்கும்)
டி 134524 ஈ 134524

இரண்டாம் பரிசு: ரூ. 3000-
(3 பரிசுகள் வரிசைக்கு ஒன்று வீதம்)
டி 165542 ஈ 123359 எப் 131786

மூன்றாவது பரிசு ரூ. 1,000-
(3 பரிசுகள் வரிசைக்கு ஒன்று வீதம்)
டி 111371 ஈ 171862 எப் 112739

அனைத்து வரிசைக்கும் பொது
நான்காவது பரிசு: ரூ. 250- 30 பரிசுகள்
கீழ்க்கண்ட ஐந்து எண்களில் முடியும் அனைத்து பரிசுச்சீட்டுகளுக்கும்

04043 28622 42489 63793 84205
16988 36908 57440 76615 92703

ஐந்தாவது பரிசு: ரூ. 25- (600 பரிசுகள்)
கீழ்க்கண்ட நான்கு எண்களில் முடியும் அனைத்து பரிசுச் சீட்டுகளுக்கும்

0714 2489 4710 6394 8314 0308 2790
4071 6828 8100 1740 3110 5812 7205
9360 1264 3280 5898 7215 9924

ஆறாவது பரிசு: ரூ. 5- (3000 பரிசுகள்)
கீழ்க்கண்ட மூன்று எண்களில் முடியும் அனைத்து பரிசுச்சீட்டுகளுக்கும்

045 230 474 601 801 171 353 507 754 959

பரிசுத் தொகை பெற விண்ணப்பிக்க வேண்டிய கடைசி நாள்: 7-2-88

அடுத்த திருமகள் வாராந்திர குலுக்கல் 16-12-87 அன்று சென்னையில் நடைபெறும்

காவிரி சிறப்புக் குலுக்கல் திருமகள், மற்றும் கிறிஸ்துமஸ் சிறப்புக் குலுக்கல்களுக்கான பரிசுச்சீட்டுகள் விற்பனையில் உள்ளன.

இயக்குநர்
தமிழ்நாடு பரிசுச்சீட்டு
சென்னை-1

DIPR 2854-MS-87-ELEGANT

# இந்திய அரசாங்கம்

## அணுமின்சக்தி இலாகா

### இந்திரா காந்தி அணு ஆராய்ச்சி மையம்

டெண்டர் எண்-CEG IGC 76-87, தலைமைப்பொறியாளர்[சிவில்] இந்திராகாந்தி அணு ஆராய்ச்சி மையம் கல்பாக்கம் 603102, செங்கல்பட்டு மாவட்டம் தமிழ்நாடு அவர்களால் கல்பாக்கம். இந்திரா காந்தி அணு ஆராய்ச்சி மையத்தில் பொறியியல்கூட எண்,3 கட்டிடம் கட்டுவதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள் அனுபவம் வாய்ந்த புகழ்பெற்ற மற்றும் தேவையானதொழில் நுட்ப நிதிவசதி தகுதியும் கட்டிடத் தொழிலுக்கு தேவைப்படும் உபகரணங்கள். (Equipments) வைத்துள்ள, குறைந்தபட்சம் ஒரு தனி ஒப்பந்தத்தின் மூலம் ஒரு கோடி ரூபாய்க்கு கட்டிட வேலைகளை ஏற்று முடித்துள்ள சிவில் இன்ஜினீயரிங் காண்ட்ராக்டர்களிடமிருந்து வரவேற்கப்படுகின்றது, E.C.ரூபாய் 125லட்சம் டேவணித்தொகை டெபாஸிட் ரூபாய் 20,000- செக்யூரிட்டி டெபாஸிட் ரூபாய் 1.00,000-முடிக்க வேண்டிய காலம் 22 மாதங்கள்.

டெண்டர் பத்திரங்கள் 18.12.87முதல் 7.1.88வரை எல்லா அலுவலக நாட்களிலும் அலுவலக நேரங்களில் எழுத்து மூலமான விண்ணப்பத்துடன் ரூபாய்500-+வி.வரி ரூபாய் 25 சேர்த்து ரொக்கம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தியதற்கான ரசீதும் இணைத்து அனுப்பி அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் இந்திரா காந்தி அணு ஆராய்ச்சி மையம், கல்பாக்கம் -603102 அவர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். இந்த டெண்டரின் அடிப்படையில் அளிக்கப்படும் வேலைகளில்43 மீட்டர் உயர வளைவும் (43 METRES HIGH BAY) கட்டுதலும் உட்பட்டதாகும் டெண்டர்தாரர்கள் தங்களின் முன்-அனுபவம் குறித்த விவரங்களையும் முக்கியமாக, ஆழமான அடித்தள (UNDER GROUND BASEMENT)கட்டுதல் மற்றும் கனமான ஆர்.ஸி.ஸி ஸ்டரக்சர்கள் உபயோகித்து உயரமான கட்டிடங்கள் கட்டுதல் ஆகியவற்றின் முன்அனுபவங்களையும், கடந்த ஐந்து வருட காலத்தில் தங்களின் வருடாந்திர மொத்த வியாபாரத்தையும் மற்றும் தங்கள் கைவசம் வைத்து கட்டிட எக்விப்மெண்டுகளின் விவரத்தையும் விண்ணப்பத்துடன் தெரிவிக்கவேண்டும் டெண்டர்தாரர் ரொக்கமாக ரூபாய் 1000-டெபாஸிட் செலுத்திஒரு செட் டெண்டர் வரைபடங்கள் பெற்றுக்கொள்ளலாம். இந்த தொகை, வரைபடங்கள் அனைத்தையும் திருப்பி அளித்தவுடன் டெண்டர்தாரருக்கு தொகை மீண்டும் வழங்கப்படும்.

டெண்டர்கள் தனித்தனிமுத்திரையிட்ட கவர்கள்இரண்டு பாகங்களாக கவர்களின் பேரில் "பாகம்I" மற்றும் பாகம்II என்று குறிப்பிட்டு அனுப்பவேண்டும் பாகம்I தொழில் நுட்ப மற்றும் வியாபார விவரங்களும் பாகம்II-ல் விலை ஒப்பந்தவிவரமும் வைத்து அனுப்பவேண்டும்.

பாகம்Iமற்றும் பாகம்IIஆகிய இரண்டு கவர்களும் தலைமைப்பொறியாளா [ஸிவில்]இந்திராகாந்தி அணு ஆராய்ச்சி மையம் மத்தியவரைபட அலுவலகம் கல்பாக்கம் அவர்களால் 21 1-1988 பிற்பகல் 3 மணி வரை பெற்றுக் கொள்ளப்படும். பாகம் I அதே தினம் பிற்பகல் 3.05 மணிக்கு நேரில் ஆஜராகியுள்ள டெண்டர்தாரர்கள் முன்னிலையில் திறக்கப்படும் பாகம் II அதற்கு பின்னர் ஒரு தேதியில் திறக்கப்படும்.

கீழ் குறிப்பிடப்பட்டுள்ள இணைப்புகள் இன்றி அனுப்பப்படும் டெண்டர்கள் நிராகரிக்கப்படும்.

[A] ரிசர்வ் பாங்கியினால் அங்கீகரிக்கப்பட்ட ஏதாவது ஒரு ஷெட்யூல் வங்கியில் பெற்ற டிமாண்ட் டிராப்ட் அல்லது டிபாஸிட் அழைப்பு ரசீது டேவணித்தொகை டெபாஸிட்டிற்காக அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் இந்திரா காந்தி அணு ஆராய்ச்சி மையம், கல்பாக்கம் அவர்கள் சார்பில் எடுத்து இணைக்கப்படவேண்டும் அல்லது (அரசினால் அங்கீகரிக்கப்பட்ட வகையில்) ரிசர்வ் பாங்க் கியாரண்டி பெற்ற ஏதாவது ஒருஷெட்யூல்ட்வங்கியிலிருந்து பெற்ற கியாரண்டிபாண்ட்(குறைந்த பட்சம் )ஆறு மாத காலத்திற்கு செல்லுபடியாகக் கூடியதாக இணைக்கப்பட வேண்டும்.

குறிப்பு: டேவணித் தொகைக்காக ரொக்கம் அல்லது செக்குகள் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

தற்போதைய அங்கீகரிக்கப்பட்டவகையில் செல்லுபடியாகக்கூடிய வருமானவரி சான்றிதழ். எவ்வித காரணமும் காட்டாமல் எந்த ஒரு டெண்டரையோ அல்லது எல்லா டெண்டர்களையுமே நிராகரிக்க அல்லது பகுதி வேலைகளை பல்வேறு ஏஜன்சிகளுக்கு பகிர்ந்து அளிக்க இந்திரா காந்தி அணு ஆராய்ச்சி மைய, பிரதமப் பொறியாளர் [சிவில்] அவர்களுக்கு பூரண உரிமையுண்டு.

davp-645[314]87

